Inspectors of Schools in the Madras Educational Subordinate Service. Those deputed by private managements are to be absorbed in schools under their control.

SRI A. VEDARATHNAM : ஸார், இந்த ஆதாரக் கல்விப் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள், பல்வேறு ஆதாரக்கல்வி இல்லாத பள்ளிக் கூடங்களுக்கு அனுப்பப்படுகிறார்கள். ஆகவே, இம்மாதிரி விசேஷப் பயிற்சி பெற்றவர்களை, ஆதாரக் கல்வி ஸ்தாபனங்களுக்கே அனுப்பி அவர்கள் அங்கே வேலைசெய்யக்கூடிய ஏற்பாட்டை சர்க்கார் செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆதாரக் கல்வி ஸ்தாபனங்களில் இடம் இருக்கும் அளவுக்கு அவர்கள் அங்கேதான் அனுப்பப்படுகிறார்கள். இடம் போதுமான அளவுக்கு இல்லாவிட்டால், ஆதாரப்பயிற்சி பெற்றிருந்தாலும், அவர்கள் மற்ற இடங்களில் வேலை செய்வதால், அந்த இடத்தில் தரமும் உயரும் என்று நினைக்கிறேன்.

*Separate Medical College for women*

* 571 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal before the Government to set apart one of the medical colleges in the State solely for lady students and the others for men students?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI S. LAZAR : கோ-எஜுகேஷன் கூடாது என்ற கொள்கையை அரசாங்கம் விரும்புகிறதா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்பேர்ப்பட்ட முறை சின்னஞ்சிறு பள்ளிக்கூடங்களில் சரிதான். ஆனால், காலேஜுக்கு வந்து விட்டால், **I think it is conducive to the development of culture.**

SRIMATHI KAMALAMBUJAMMAL : பெண்கள் அதிகமாக மெடிகல் காலேஜுக்கு வருகிற காரணத்தினால், அவர்களுக்கென்று பல தனிப்பட்ட காலேஜ்கள் இருப்பதாலும், அவர்களுக்கென்று ஒரு தனிப்பட்ட மெடிகல் காலேஜ் ஏற்படுத்தக்கூடாதா என்பதை அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மொத்தம் 400 இடங்களில் 20% அவர்களுக்கு ஒதுக்கி வைத்திருக்கிறது.

*Central grants for roads*

* 572 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any annual allotment is made by the Central Government for the formation of new roads and maintenance of old roads to the State Government ; and

(*b*) if so, the amount so allotted for the past three years 1955–56, 1956–57 and 1957–58?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*)

| —— | 1955–56. LAKHS. | 1956–57. LANHS. | 1957–58. LAKHS. |
|---|---|---|---|
| **Formation of new roads (including National Highways).** | **3·28** | **15·77** | **3·84** |
| **Maintenance of old roads (National Highways only).** | **42·00** | **43·59** | **36·20** |

27th September 1958]

SRI K. RAMACHANDRAN : ரோடு அபிவிருத்தி இல்லாது பின்தங்கிய பிரதேசங்களுக்கு இதை விட ஏதாவது ஒரு பகுதி ஒதுக்கப் பட்டிருக்கிறதா ? அப்படியானால் இந்த ஆண்டில் எவ்வளவு ஒதுக்கப் பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : இதைப்பற்றி தனியாக கேள்வி போட்டால் முழு விவரம் கொடுக்கிறேன்.

SRI K. B. S. MANI : ரோடுகள் பராமரிப்புக்கு என்று மத்திய சர்க்காரிடமிருந்து தொகை ஒதுக்கப்படுகிறபோது மொத்தத் தொகையில் ஒவ்வொரு ஜில்லாவிற்கும் இவ்வளவு என்று ஒதுக்கப்படுகிறதா ? குறிப்பிட்ட இடங்களில் இந்த ஆண்டில் தஞ்சை ஜில்லாவுக்கு எவ்வளவு ஒதுக் கப்பட்டிருக்கிறது ? தஞ்சை ஜில்லாவில் குறிப்பிட்ட ஒரு தாலுகாவுக்கு மட்டும் அப்படி ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதைத் தவிர வேறு தாலுக்காக் களுக்கும் ஒதுக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THR HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் கேட்கும் கேள்வி இந்தக் கேள்வியிலிருந்து எழவில்லை. ஆகையால் தனியாக கேள்வி கேட்கவேண்டும்.

SRI N. MAHALINGAM : சமீபத்தில் எண்ணெயின் விலை குறைந்ததன் காரணமாக அதிலிருந்து வரக்கூடிய லாபத்தை எடுத்து எக்ஸ்ப்ரஸ் ஹைவேஸுக்கு வசதி செய்து கொடுக்க சில இடங்களில் கொடுத்து வருகிறார்கள். அதைப் போலவே மத்திய சர்க்கார் நம்முடைய மாகாண சர்க்காருக்கு அப்படிப்பட்ட தொகை ஏதாவது கொடுத்திருக்கி றார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இதற்கும் தனியாக கேள்வி போடவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI : ஸ்டேட் ரோடு போடுவதற்காக சென்ற ஆண்டு பல லட்சக்கணக்கான ரூபாய் மத்திய சர்க்கார் நமக்கு அனுமதித்திருந்தும் அதில் ஒரு பைசாக்கூட வாங்கி செலவழிக்காமல் அது காலாவதியாகக்கூடிய அளவுக்குப் போய்விட்டது, அந்த அளவில் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவில்லை, ஏன் ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர், மத்திய சர்க்கார் ஒன்றுமே கொடுக்கவில்லை என்று சொல்லக்கூடியவர் இப்பொழுது அதிகமாகக் கொடுத்திருக்கிறார்கள் என்று ஒப்புக்கொள்வதைப் பார்த்து நான் பாராட்டுகிறேன். (சிரிப்பு). இருந்தாலும் அவர்கள் கொடுத்த தொகையில் எவ்வளவு தூரம் செலவு செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் செலவு செய்துகொண்டுதான் வருகிறோம்.

SRI R. SWAMINATHA MERKONDAR : தற்போது கன்ட்ரிப்யூஷன் கொடுக்க முடியாத நிலையில் சில பிற்போக்கான நிலைமை யிலுள்ள கிராமங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு சர்க்கார் நிதியிலி ருந்து ஏதாவது கொடுத்து ரோடுகள் போட்டு வசதி செய்து கொடுப் பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : சில இடங்களில் திட்டம்போட்டு வசதி செய்து கொடுக்கப்பட்டு வருகிறது. கனம் அங்கத்தினர் ஏதாவது குறிப்பிட்டுச் சொன்னால் அதைப்பற்றி கவனிக்கப்படும்.

### *Causeway across Cooum river*

* 573 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether any representation was presented to the Hon. the Chief Minister by the villagers for the formation of a road from